[25th March 1961

SRI R. SRINIVASA IYER: ஸார், சமுத்திரம் பூமியை அரித்துக்கொண்டு போவதால் தனுஷ்கோடி பியரே போய்விடும், தனுஷ்கோடியிலிருந்து தலைமன்னாருக்குப் போகும் கப்பல் நின்றுவிடும் என்று பேபரில் அநேக தடவைகள் போட்டிருந்தது. அந்த மாதிரி தகவல் சர்க்காருக்கு வந்திருக்கிறதா? இதைத் தடுக்கும் வரையில் தனுஷ்கோடி-தலைமன்னார் பாஸஞ்சேர் சர்வீஸை நடத்த சர்க்கார் சிபாரிசு செய்யுமா?

THE HON. SRI P. KAKKAN: என்னிடத்தில் அந்தக் தகவல் இல்லை. ஸீ எரோஷனைத் தடுக்கவேண்டுமென்பதைப் பற்றி மத்திய அரசாங்கத்தினிடம், அதாவது ரெயில்வே போர்டினிடம் சொன்னோம். அதற்கென்று ஒரு எக்ஸ்பர்ட் கமிட்டியைப் போட்டு பரிசிலனை செய்யச் சொன்னார்கள். அப்படிப் பார்த்ததில் அதிகப்படியாக நாம் செலவு செய்வதைக் காட்டிலும் பார்த்துச் செலவு செய்ய வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். கடைசியாக பூனாவில் ரிஸர்ச் செய்து பார்த்து முடிவு செய்யலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். அதற்காக இந்த சர்க்கார் ரிஸர்ச் செய்து கொண்டிருக்கிறது. அதற்குள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு தடுப்புச் சுவர் கட்டி லோ கிரேன்ஸ் போட்டுப் பார்க்கலாம் என்று சீஃப் என்ஜினீயர் அபிப்பிராயப்படுகிறார். அதைப்பற்றி பின்னால் தான் முடிவுக்கு வரவேண்டும்.

SRI V. SUBBIAH: மணப்பாடு என்ற இடத்தில் பல வீடுகள் கடலுக்குள் போய் விட்டதாகக் கேள்விப்படுகிறேன். இதை எப்படி காப்பாற்றி இருக்கிறார்கள்? என்ன செலவு செய்திருக்கிறார்கள்?

THE HON. SRI P. KAKKAN: அங்கேயும் சில செடிகளை வைத்து க்ரேன்ஸ் வைத்து எந்தவித ஆபத்தும் இல்லாமல் செய்யப்பட்டிருக்கிறது.

SRI A. GOVINDASAMY: கடலரிப்பைத் தடுக்க மத்திய அரசாங்கத்தினிடமிருந்து நிதி கோரப்பட்டிருக்கிறதா? அப்படியானால் எவ்வளவு வந்திருக்கிறது?

THE HON. SRI P. KAKKAN: அந்தத் தகவல் என்னிடத்தில் இப்போது இல்லை. தனியாகக் கேள்வி போட்டால் சொல்லலாம்.

*Moat at Vellore Fort (rearing of fish)*

*1079 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் கோட்டை அகழியில் என்னென்ன வகையான மீன்கள் வளர்க்கப்படுகின்றன?

(இ) 1958-59, 1959-60 ஆண்டுகளில் அதில் பிடிக்கப்பட்ட மீன்கள் அளவும், விலை மதிப்பும் எவ்வளவு?

25th March 1961]

(உ) வேலூர் கோட்டையைச் சுற்றியுள்ள அகழியில் தெற்கு, கிழக்கு பகுதியையும் ஆழப்படுத்தி தண்ணீர் நிரப்பி அதிலும் மீன் வளர்க்க உத்தேசமுண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) Labeo, cirrihina species, Rohu, Mrigal, Catla, Chanos, Mirror Carp, Etroplus and Gourami.

(இ) The quantity of fish caught in the Moat and the value thereof for 1958–59 and 1959–60 are :—

| | Fish Caught. | Revenue realized. | |
|---|---|---|---|
| | | RS. | NP. |
| 1958–59 | 23,667 | 7,020 | 00 |
| 1959–60 | 16,959 | 4,001 | 41 |

The above figures do not include the fish caught by the licensees, since those particulars are not recorded by the Department. However, a revenue of Rs. 176 57 nP. and Rs. 109·00 nP. were realized during 1958–59 and 1959–60 repectively by issue of of licences.

(உ) The deepening of the Moat in order to have a continuous sheet of water in it is under the consideration of the Public Works Department. When this materializes, there will naturally be further scope for development and multiplication of fish in the extended area.

SRI S. M. ANNAMALAI : ஸார், அந்த மீன் இப்போது ஒரு பவுண்டு என்ன விலைக்கு விற்கப்படுகிறது என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அந்தந்த சமயத்திற்குத் தகுந்த மாதிரி அதிகமாகக் கிடைத்தால் குறைந்த விலைக்கும், குறைவாகக் கிடைத்தால் அதிக விலைக்கும் விற்கப்படுகிறது.

SRI A. VEDARATHNAM : கனம் அமைச்சர் அவர்கள் இப்போது படித்த மீன்களின் பெயரை தமிழில் சொல்ல முடியுமா ? இந்த மீன் குஞ்சுகள் எங்கிருந்து தயாரிக்கப்படுகின்றன, எப்படி அபிவிருத்தி செய்கிறார்கள் என்று தயவுசெய்து சொல்ல முடியுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : சில மீன்கள் நமது நாட்டில் உள்ள மீன்கள். சில மீன்கள் வேறு இடத்திலிருந்து வந்தவைகள். வேறு இடத்திலிருந்து வந்த மீன்களுக்கு தமிழில் பெயர் கொடுக்கவில்லை. தமிழ் பெயர்கள் உள்ளதைச் சொல்லுகிறேன்.

| | |
|---|---|
| Labeo— | சேல் கெண்டை |
| Cirrihina— | வெண்கெண்டை அறிஞ்சான் |
| Rohu— | ரோஹு |
| Mrigal— | மிருகால் |
| Catla— | தோப்பா |
| Mirror Carp— | கண்ணாடிக் கெண்டை |

Chanos— பால் கெண்டை
Etroplus— செத்த கெண்டை
Gourami— குராமி

SRI A. GOVINDASAMY: சில மீன்கள் வெளி இடங்களி லிருந்து கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டது. எங்கிருந்து கொண்டுவரப்பட்டது, எங்கு வளர்க்கப்படுகிறது என்று அறிய விரும்புகிறேன்?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: பெங்கால், கல்கத்தா முதலிய இடங்களிலிருந்தும் இன்னும் வேறு வெளி நாடுகளிலிருந்தும், துரிதமாக வளரக்கூடிய மீன்கள், இங்கு இல்லாத மீன்கள் கொண்டுவரப்பட்டுள்ளன. அவைகளை பவானி சாகரிலும், ஊட்டியிலும் வளர்க்க வாய்ப்புகள் ஏற்பட்டிருக் கின்றன. இப்போது அதிகமாக குஞ்சுகளை வெளி இடங்களி லிருந்து வாங்கும் தேவை இல்லாமல் இருக்கிறது. இதைப் பார்ப் பதற்கு அங்கத்தினர்களுக்கு விருப்பமிருந்தால் பவானி சாகரி லும், ஊட்டியிலும் சென்று பார்த்துக்கொள்ளலாம்.

SRI N. R. THIAGARAJAN: கனம் அமைச்சர் அவர்கள் மீன் வகைகளைப்பற்றிக் கூறும்போது கனம் அங்கத்தினர்களுக்கு நாக் கில் ஜலம் ஊறியிருக்கும். கனம் அங்கத்தினர்களுக்கு இவை களின் ருசி தெரிவதற்காக மீன் வகை பதார்த்தங்களைத் தயார் செய்து அவர்களுக்குக் கிடைக்க வழி செய்வார்களா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: இந்த மீன் கள் கிடைக்குமிடத்தில் தங்கி சாப்பிட்டுப் பார்த்தால் நன்றாக இருக்கும்.

*Railway Minister's speech (instigation to violence)*

* 1080 Q.—SRI A. VEDARATHNAM: கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய அரசாங்க ரயில்வே அமைச்சர் அக்டோபர் 12-ந் தேதி காந்தி கிராமத்தில் பேசியபோது நம் மாநில மக்களின் ஒரு சாரார் மனம் புண்படும்படியும், பலாத்காரத்தைத் தூண்டும் முறையிலும் பேசியது நம் அரசாங்கத்திற்குத் தெரியுமா?

(இ) அப்படியானல், இதுபற்றி நம் அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறதா? அதன் விவரமென்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) Government have no information other than what has been reported in certain newspapers.

(b) Government do not consider it necessary to take any action in the matter.

SRI A. VEDARATHNAM: ஸார், இந்த தீண்டாமை என்பது புராணங்களில் இருக்கிறது. அந்த சரித்திரங்களைப் படித்து அதில் நம்பிக்கையுள்ளவர்களுக்கு தவருக இருந்தாலும் சரியாக இருந்தாலும் நம்பிக்கை மூலம் வந்த பழக்கம். அதை